

தனிக் கலாச்சாரம் கொண்ட பெரியதொரு சமுதாயம் சிறியதோர் சமுதாயத்தின் கலாச்சாரக் கலப்பால் தன் தனிப் பெருமையிழந்து அழிந்துவிடும் நிலை பெறுகிறதென்றால் - எருக்க மலர்களைக் கூட தன் பூந்தோட்டத்திலே ஏற்றுக் கொள்கிற நிலைக்கு மனவளம் பெற்று விட்டதென்றால் வருந்தத்தக்க செய்திதானேயிது!

ஒரு குடம் பாலிலே ஒரு துளி விஷம் கலந்தால் விஷம் பாலாகாது. பால் விஷமாகும். அதே நிலைதான் நமது பூந்தோட்டத்திலே வளர்ந்து வருகிறது. ஜாதி உணர்ச்சி அது போலத்தான், ஜாதியென்னும் ஒரு சொல்லேயில்லாத சமுதாயத்தின் மீது படையெடுத்து பணிய வைத்து விட்டது.




நன்கொடை: ரூ.10/-

# கலைஞரின்

# பூந்தோட்டம்



சென்னை கிண்டி இன்ஜினியரிங் கல்லூரியில்

**06.12.1951**இல் தோழர் **மு. கருணாநிதி**

ஆற்றிய சொற்பொழிவு

**திராவிடர் கழக (இயக்க) வெளியீடு**

பெரியார் திடல், 84/1 (50), ஈ.வெ.கி. சம்பத் சாலை,

வேப்பேரி, சென்னை - 600 007.

# நூல் குறிப்பு


| | | |
|---|---|---|
| நூல் பெயர் | : | கலைஞரின் பூந்தோட்டம் |
| ஆசிரியர் | : | டாக்டர் கலைஞர் மு. கருணாநிதி |
| பதிப்பு | : | முதற்பதிப்பு - 1951 (திராவிடப் பண்ணை)<br>மறு பதிப்பு - 2018 |
| பக்கங்கள் | : | 16 |
| கட்டமைப்பு | : | சாதாரணம் |
| நன்கொடை<br>(குறைந்த அளவு) | : | ரூ.10/- |
| வெளியீடு மற்றும்<br>உரிமை | : | **திராவிடர் கழக (இயக்க) வெளியீடு**<br>சென்னை - 600 007. ☎: 044 - 2661 8161 |
| அச்சுக் கோப்பு | : | பெரியார் கணினி ஆய்வுக் கல்வியகம்,<br>சென்னை - 600 007. |
| அச்சிட்டோர் | : | 'விடுதலை' ஆஃப்செட் பிரிண்டர்ஸ்,<br>சென்னை - 600 007. |
| கிடைக்குமிடங்கள் | : | பெரியார் புத்தக நிலையம்<br>• பெரியார் திடல், 84/1 (50), ஈ.வெ.கி. சம்பத் சாலை,<br>வேப்பேரி, சென்னை -600 007. ☎: 044-26618163<br>• பெரியார் மாளிகை, புத்தூர், திருச்சி-620 017 ☎: 0431-2771815 |

# பதிப்புரை

'மானமிகு சுயமரியாதைக்காரன்' என்று தன்னை ஒருவரியில் விமர்சித்துக்கொண்டவர், தந்தை பெரியாரின் ஈரோட்டுக் குருகுலத்தின் மாணவர் முத்தமிழ் அறிஞர் தி.மு.க தலைவர் கலைஞர் மு. கருணாநிதி அவர்கள்.

அவர்கள் 67 ஆண்டுகளுக்கு முன், சென்னை கிண்டி பொறியியல் கல்லூரி தமிழ் மன்றத்தில் 'பூந்தோட்டம்' என்ற தலைப்பில் ஆற்றிய இலக்கியப் பொழிவே இச்சிறுநூல்.

இளைஞர் உலகம் இதனை வாசிக்க வேண்டும்; அவர்தரும் சமூகப் புரட்சிக்கான கருத்து மலர்களை சுவாசிக்கவும் வேண்டும்.

'பாராட்டிப் போற்றிவந்த பழமை லோகம்
ஈரோட்டுப் பூகம்பத்தால் இடியுது பார்'

என்று 1948 லேயே 'கவிதையல்ல' என்று கூறி கவிதை எழுதியவர் நம் கலைஞர் அவர்கள்.

திராவிட இயக்கம் கண்ட சோதனைகள் வேதனைகளை வென்றெடுத்த, அறிஞர் அண்ணாவின் வழியில் ஆட்சியைச் சிறப்பாக நடத்திட்ட ஆற்றலாளர் எப்படி உயர்ந்த கருத்தாளராகவும் திகழுகிறார் என்பதற்கான சான்றே இந்நூல்.

படித்து, கற்று - பயனடைக

**கி. வீரமணி**
பதிப்பாளர் சார்பில்

12.01.2018

# எரிமலை !
# (மு.கருணாநிதி)

வேகத்திலே காற்றடித்தால் மேகந்தன் உருமாறும் - பண
மோகத்திலே பாய்ந்து விட்டால் கொள்கை மாறும்
சான்றுகள் தேவை யென்றால் சேலத்தில் தோன்றிய
திட்டங்கண்டு தொகையறா பாடியவர் பலருண்டு!
பட்டம் பெறும் நோக்கம் பகுத்தறிவுக் கட்சிக்கு ஆகாதெனச்
சட்டம் வகுத்த பின்னர் சாய்ந்தனர் சழக்கர்
சரிந்து விடவில்லை சதிகாரரே கட்சி!
புரிந்து கொள்வீர்! புகையும் **எரிமலை** புன்னகை அருவியல்ல!

❖

# பூந்தோட்டம்

தலைவர் அவர்களே! தோழர்களே! கிண்டி இன்ஜினியரிங் கல்லூரி தமிழ்க் கழகத்தின் சார்பாக நடைபெறும் இந்த விழாவில் என்னைக் கலந்து கொள்ளுமாறு விரும்பிய நண்பர்கட்கெல்லாம் என் நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன். தலைவர் முன்னுரையில் உங்களை யெல்லாம் நான் பூந்தோட்டத்திற்கு அழைத்துச் செல்லப் போகிறேன் என்றும், அது எத்தகைய பூந்தோட்டமாக இருக்குமோ என்று ஆர்வத்தின் காரணமாக அய்யமுற்று, ஒருவேளை இலக்கியப் பூந்தோட்டமாக இருந்தால் அவர் பின்னே சென்று இலக்கிய இன்பம் அனுபவித்து பிறகு திரும்பும்போது வருத்தமுடன் திரும்ப வேண்டுமோ என்று சந்தேகப்பட்டு, அது போன்றச் சூழ்நிலையை சொற்பொழிவாளர் சிருஷ்டிக்க மாட்டார் என்று நம்புவதாக ஜாடை காட்டிப் பேசி முன்னுரையை முடித்துக் கொண்டார். நான் உங்களையெல்லாம் பூந்தோட்டத்திற்கு அழைத்துச் செல்ல வரவில்லை. நாமெல்லாம் அமர்ந்திருக்கும் பூந்தோட்டத்தைப் பற்றித்தான் பேசப்போகிறேன்.

பூந்தோட்டம் அமைப்பதென்பது சாதாரணமானதல்லதான். தோட்டம் அமைக்க, காடுகளை அழிக்க வேண்டும். மேடுகளை இடித்து மட்டமாக்க வேண்டும். பள்ளங்களைச் சரிப்படுத்திப் பண்படுத்த

வேண்டும். இப்படியெல்லாம் சிரமப்பட்டு சிருஷ்டிக்கப்பட்ட சிங்காரப் பூந்தோட்டம் திடீரெனவோ, அல்லது சிறிது சிறிதாகவோ சீரழிந்து விடுவதுமுண்டு.

பொழுதுதோறும் புனலுக்கும், அனலுக்கும், கக்கும் விஷப் பாம்பினுக்கும் இடையறா நோய்களுக்கும் ஈடு கொடுத்து உண்டாக்கிய பூந்தோட்டத்திலே மலர்ந்து மணம் வீசும் மலர்களை, உழைக்காதவன், வியர்வை சிந்தாதவன் பறித்துச் சென்று பரவசத்திலீடுபடுகிறான் ஒரு புறத்திலே! இரும்புக் கரம் உண்டாக்கிய இன்பச்சோலை! அதிலே சுவை சிந்தும் தேன் மலர்! அதைக் கொய்துச் செல்லும் பொன் கரம்! இப்படி ஒரு வேதனையான சூழ்நிலை பூந்தோட்டத்திலே! அடுத்தது, பூந்தோட்டத்திலே பயிராக்கப்பட வேண்டிய மலர்கள் என்ன என்ன என்பது!

எழில் ரோஜா இருப்பதா? அல்லது எருக்க மலர் இருப்பதா? கவின் பொழியும் மல்லிகைக் கொடியா? கள்ளிக்காடா? இது போன்ற கேள்விக் குறிகள் உலவுகின்ற நிலை பூந்தோட்டத்திலே!

அடுத்தது, பூந்தோட்டத்தை மிதித்து நாசமாக்கிய மாடுகளையும் ஆடுகளையும் விரட்ட வேண்டும் என்ற அவசரம் ஏற்பட்டு, மாடும் ஆடும் ஓடி விட்டன என்ற உற்சாகத்திலிருப்பவரிடம், ஆடும் மாடும் போனது உண்மை ஆனால் சேர்ந்திருந்து செழிப்பைக் கொல்லும் சிறு பூச்சிகளும், புல்லுருவிகளும் போக்கப்பட வேண்டும் என்ற முழக்கம் ஒரு புறம் பூந்தோட்டத்திலே!

இத்தகைய மூன்று விதமான பிரச்சினைகள் முற்றுகையிட்டிருக்கும் பூந்தோட்டம் நம் கவனத்துக்குரியது தான்.

கவனத்துக்குரியது மட்டுமல்ல; கவலை கொண்டு காரியமாற்ற வேண்டிய கடமையுணர்ச்சியையும் காற்றோடு கலந்து நம் உணர்வைத் தொடுகிற உயர் பணியைக் கூடச் செய்யக்கூடியது தான் நாம் ஆராயப்போகிற 'பூந்தோட்டம்'!

நாம் வதியும் தமிழகத்தை ஒரு பூந்தோட்டமாக நினைத்துப் பார்த்தால், சிலப்பதிகார ரோஜாவும், சீவக சிந்தாமணி யெனும் செண்பகமும், குண்டலகேசிப் பூங்கொத்தும், மணிமேகலை மல்லிகையும், அகம்புற மென்ற அன்றலர்ந்த முல்லைகளும் மணம் பரப்பிடக் காணுகிறோம். அந்த மலர்களின் மணத்தை மொண்டு மொண்டு தரும்

தென்றலாக, பாரதியார் – பாரதிதாசன் – கவிதைகளும் மிதந்திடுவதைக் காணுகிறோம். இத்தகைய சீர் குலுங்கும் நந்தவனத்திலே ஒரு மூலையிலே **கள்ளிக் காடும் இல்லாமலில்லை. வாசமற்ற கனகாம்பரமும் வைக்கப்படாமலில்லை. மாலை வேளையிலே உல்லாச உலவல் நடத்த முடியாதபடி பயமுறுத்துகின்ற பாம்புகள் வாழும் பெரும் புற்றுக்களும் தோன்றாமலில்லை.**

கள்ளி என்கிறேன். சிலருக்குக் கடுமையாகக் கூடத் தெரியலாம் உள் நுழைந்து பார்க்காத காரணத்தால், கம்பராமாயணம் தமிழகப் பூங்காவிலே கள்ளியாகத்தான் வளர்ந்து விட்டது. கள்ளி மலரிலே அழகுண்டு, கம்பர் காதையிலே கவிதை நயம், இருப்பதுபோல! கள்ளி மலரிலே நறுமணம் கிடையாது; கம்பர் சித்திரத்திலே இன உணர்வு இல்லாதது போல!

முள் நிறைந்தது கள்ளி! தமிழ் உணர்ச்சிக்கு முட்டுக்கட்டை போடுவது ராமாயணம்!

சிலப்பதிகாரத்தை ரோஜாவென்று குறிப்பிட்டேன், ரோஜாவுக்கும் முள் இருப்பதால்!

சிலப்பதிகாரம் முள் இடை ரோஜா மலர்! கம்பராமாயணம் முள்ளிடை கள்ளிமலர்!

சிலப்பதிகாரத்திலே கற்பனைக் கெட்டாத சம்பவங்கள் இருக்கலாம். ஆனால் சிலம்பு ஒலிக்கும் போது செந்தமிழ்ப் பண்பு ஒலிக்கிறது. சேரனின் வாழ்வும், சோழனின் வளமும், பாண்டியனின் நேர்மையும் – மொத்தத்திலே மூவேந்தர் ஆண்ட மூன்று பெரும் நாடுகளைப் பற்றிய குறிப்புகளும் நிறைந்து கிடைக்கின்றன. இளங்கோ தந்த அந்த இன்பப் புதையலிலே! சேரனின் தம்பி தயாரித்த தங்க ரோஜா சிலப்பதிகாரம்!

கற்பனைக் கெட்டாத நிகழ்ச்சிகள் இதிலே உள்ள முட்கள்! **ரோஜா தேவையா? இல்லையா?** என்பது விவாதிக்கத் தேவையில்லாத பிரச்சினை!

இத்தகைய காடுகள் பூந்தோட்டத்திலே பரவிடக் கூடாது என்கிறது ஒரு பலமான குரல்! பகுத்தறிவுக் குரல்! இல்லை – அவைகளும் இருக்கத்தான் வேண்டுமென்கிறது ஒரு மெலிந்த தொனி! பண்டிதர்கள் பக்கமிருந்து கிளம்பும் தொனி!

கண்ணொளி கெட்ட திருதராஷ்டிரன் கடைசி வரையில் குருடனாகத்தானே இருந்தான் என்று இளைஞர்கள் கேட்டிருப்பார்கள் - தண்ட காரண்யத்திலே காணாமற் போன சீதை மட்டும், இந்தக் காலத்திலே காணாமற் போயிருந்தால், ராமனுக்கு சுக்ரீவனுடைய உதவியா வேண்டும்; சுதேசமித்திரன் பத்திரிகையே போதுமே!...

"என் மனைவி சீதை இன்ன அடையாளமுள்ளவள் அவளைத் தேடிவா" என்று அனுமானிடம் கூறியதை, ராமன் பத்திரிகையிலே விளம்பரப்படுத்தி வெகு சுலபமாக வைதேகி இருக்குமிடத்தை அறிந்திருக்கலாமே! அல்லது, மிதிலாபுரிக்கு ஜனகனுக்கு ஒரு 'டிரங்கால்' செய்து "மாமா! உங்கள் மகள் வந்தாளா?" என்று கேட்டு, அயோத்திக்கு தந்தி கொடுத்து உன் அண்ணியைக் கண்டாயா?" என்று வினவி - எவ்வளவு சீக்கிரம் சீதை பற்றிய விபரங்களை அறிந்திருக்கலாம்.

இந்தக் காலத்து வசதிகள் எவ்வளவு சுலபத்திலே காரிய சாதனைகட்கு ஏற்றவைகளாயுள்ளன.

இந்தக் காலம் பற்றி உணர்ந்தோர் - இந்தக் கால மகிமைகளைப் பற்றி உரைப்போர் சிலர் கூட அந்தக் காலக் கருத்துக்களோடு மோதிடுவதைக் காணும்போது, கவலைதான் ஏற்படுகிறது பூந்தோட்டத்திலே உலவிடுகிற நமக்கு!

'ரிஸ்ட் வாட்ச்' கட்டிக்கொண்டு ராகு காலம் பார்க்கிறார்கள்!

மூக்குக் கண்ணாடியணிந்து பாரதம் படிக்கிறார்கள். ஹாலிவுட்டில் தயாரான கேமராவுக்கு தேங்காயுடைத்து, குங்குமமிட்டு, சூடம் கொளுத்தி வணக்கம் செய்து திரைப்படமெடுக்கிறார்கள்!

இந்த விசித்திரங்கள் வேடிக்கையாகவா தோன்றுகின்றன! வேதனைப் புயலையல்லவா திடீர் திடீரென்று பூந்தோட்டத்தில் வீசிடச் செய்கின்றன.

அமெரிக்காவிலே அரசியல் வாழ்விலே இருந்து, ட்ரூமன் ஓய்வெடுத்துக் கொண்டால் எதைப் பற்றி எழுதுவார் என்று எதிர்பார்க்கிறீர்கள்!

"பஜகோவிந்த"மா எழுதிக் கொண்டிருப்பார். மேதை, விவேகி, விற்பன்னர், அரசியல் தந்திரி ராஜிய வேலைகளை விட்டு ஓய்வு

பெறுகிறவர் உயரிய கொள்கைகளை மக்கள் உள்ளத்தைத் தொடும் உணர்ச்சி எழுத்துக்களை எழுதிக் குவிப்பார் என்று எண்ணிடுபவருக்கு, இன்பத் தாமரை தரமாட்டேன் - எருக்கம் பூவைத்தான் தருவேன் என்றால் இந்த நிலை எப்படித்தான் வர்ணிப்பது!

கள்ளிக் காடுகளே, தோட்டத்திலிருந்து அழிய வேண்டுமென்று எண்ணிடும் வேளையில் எருக்கஞ் செடிகளையும் எடுத்து வந்து பயிராக்குகிறேன் என்று முற்றுமுணர்ந்தவர்களே கூறினால் எப்படி வாய் மூடி மவுனியாக இருப்பது!

இந்தச் சங்கடமான சம்பவங்கள்தான், தமிழகச் சோலையிலே, எந்த மலர்கள் இருக்க வேண்டும், இன்னும் எத்தகைய மலர்கள் பயிராக்கப்படவேண்டும் என்ற போராட்டத்தை பகுத்தறிவு புரியினருக்கும், பழமைத் தீவினருக்கும் ஏற்படுத்தியிருக்கிறது!

எம்மலர் வைப்பது என்பது ஒரு பிரச்சினை! அடுத்தது, வைத்த மலர்கள் யாருக்குச் சொந்தமென்பது!

வியர்வை சிந்தியவன் தான் வைத்த மலர்ச் செடி தனக்குச் சொந்த மென்கிறான். வியர்வையை விருந்தாக எண்ணிடும் வீணன் மலர்கள் தன் மாளிகை மஞ்சத்திலே தூவப்பட வேண்டுமென்கிறான்.

இந்தப் போராட்டம், பூந்தோட்டத்திலே ஒரு முக்கிய அங்கம் பெறுகிறது!

'மலர் உழைத்தவனுக்கா? அல்லது உல்லாசிக்கா?' என்பது தான் பொது உடமைக்கும் பூர்ஷ்வா கொள்கைக்கும் நடைபெறுகிற போராட்டம். இதில் வெற்றிக்கொடி நாட்டிய நாடுகள் ரஷ்யாவும், சீனாவும் - நம்மைப் பார்த்து புன்சிரிப்பு சிரிக்கின்றன.

'மூன்றாவதாக தோட்டத்திலே மேய்ந்த வெள்ளை மாடுகளை விரட்டி விட்டோம் - இனி வேலி கூட தேவையில்லை' என்ற வீராப்பு பேசிடுபவருக்கும், 'வெள்ளை மாடுகள் ஓடி விட்டன; ஆனால் பூச்சிகளும் புல்லுருவிகளும் மலர்ச் செடிகளைப் பாழாக்குகின்றன' - அவைகளை ஒழிப்பதற்கு **தனியுரிமை** என்ற மருந்து தெளிக்க வேண்டும் என்பவர்களுக்கும் நடைபெறுகிற போராட்டம்!

எந்த மலர் தேவையென்பது - சமுதாயச் சீர்திருத்தம்.

மலர் யாருக்குச் சொந்தமென்பது, சமத்துவக் கோரிக்கை விளக்கம்.

'பூந்தோட்டமே யாருடையது; இப்போது யாருடைய ஆதிக்கத்திலிருக்கிறது, அந்த ஆதிக்கத்திலிருந்து விடுபட்ட சுந்தரச் சோலை சொந்தக்காரரின் வசமாக வேண்டாமா என்பது தனியுரிமைக் கோரிக்கை பற்றிய பிரச்சினை!

இந்த மூன்றில் எது முன்னர் நடைபெற வேண்டுமென்பது சிந்திக்க வேண்டிய தொன்று!

1. எந்த மலர்?
2. மலரை யார் பறிப்பது?
3. தோட்டம் யாருடையது?

இந்த மூன்று கேள்விகளையும் முறையே வைத்து ஆராயும் போது, நாம் விரும்பும் மலரை பயிராக்குவதற்கும், தோட்டம் நமக்கு சொந்தமாக வேண்டும். அதுவரையில் நாம் விரும்பும் மலர் பற்றிய சிறப்புகளைத்தான் சொல்லிவர முடியும்.

மலரை நாமே பறித்து அனுபவிப்பதற்கும் தோட்டம் நமக்குச் சொந்தமாக வேண்டும்.

அதுவரையில் மலர் நமக்குக் கிடைத்தால், எப்படி யெப்படி மாலை தொடுக்க முடியும் என்பதைத் தான் கூறமுடியும்!

ஆகவே முதலில் அவசரமாக - அவசியமாக - நடைபெற வேண்டியது, தோட்டம் நமக்குச் சொந்தமாக வேண்டியதுதான்!

தோட்டம் நமக்குச் சொந்தமாகிவிட்டால், தொல்லைதரும் பூச்சிகள் அழியும்.

தூய மலர்கள் சிரிக்கும் - மலருக்குரியவர் நாமே ஆவோம் - இந்த நல்ல காரியத்தில் ஈடுபட வேண்டுமென்று தான் உங்களையெல்லாம் அழைக்கிறேன்.

ஈடுபட வருகிறவர்கள், மலர் உழைத்தவனுக்குச் சொந்த மென்பதை உரத்த குரலில் கூறுபவர்களாக இருக்க வேண்டும்.

மாசற்ற மலர்கள் மணம் பரப்பிடவேண்டும் என்ற மனப் பக்குவம் படைத்தவர்களாயிருக்க வேண்டும்.

நாம் அமர்ந்திருக்கிற பூந்தோட்டத்திலே வீரன் செங்குட்டுவன் உலாவியிருக்கிறான்.

கடாரங் கொண்ட சோழன் களிப்புக் கீதம் பாடியிருக்கிறான்.

பாண்டியன் செந்தமிழ்ச் சங்கம் முழக்கியிருக்கிறான்.

நான் குறிப்பிடும் பூந்தோட்டம் மூன்று பக்கம் முத்து குலுங்கிடும் கடல்களைக் கொண்டது!

ஒரு புறத்தே உயர்ந்த மலைத்தொடர் கொண்டது!

வளமான வயல்கள் - வற்றாத ஜீவ நதிகள் கொண்டது!

தளிரும், மலருமட்டுமல்ல; தங்கம் தருவது!

இத்தகையப் பூந்தோட்டத்தைச் சொந்தமாக்கிடும் பணியில் ஈடுபட வாரீர் வாரீர் வழக்கு மன்றத்திற்கு என்று தான் உங்களை யெல்லாம் அழைக்கிறேன்.

இப்படி அழைப்பதிலே வகுப்புவாதம் கிடையாது - பூர்ஷுவா கொள்கை தலைநீட்ட இடமில்லை - குறுகிய மனப்பான்மை நிச்சயமாக இல்லை.

எல்லோரையுந்தான் அழைக்கிறேன். உயர்ந்த ஜாதி - தாழ்ந்த ஜாதி என்ற பேதம் பாராட்டி அழைக்கவில்லை.

அந்தப் பேதம் நீக்கப்படவேண்டும் என்ற பெரு முயற்சியில் ஈடுபட்டிருப்பவர்களைச் சேர்ந்தவன் தான் நான்.

உயர்ந்த ஜாதிக்காரரை ஒழித்து விடுவதோ, தாழ்ந்த ஜாதிக்காரரை - உயர் ஜாதிக்காரராக்குவதோ எம் நோக்கமில்லை.

உயர்ந்தவனை கோபுரத்தின் உச்சியிலேயிருந்து இறக்கி, தாழ்ந்தவனை குப்பை மேட்டிலிருந்து எழுப்பி இருவரையும் சம நிலையான ஒரு மண்டபத்தில் அமரச் செய்ய வேண்டுமென்பது தான் எம்போன்றோர் ஆசையெல்லாம்.

இதைத் தவிர உயர் வகுப்பாரிடத்திலே எந்த விதமான காழ்ப்பும் கொண்டவர்களல்ல நாங்கள்.

நாம் தாழ்ந்த நிலையில் உள்ளவர்களாயிற்றே - குழியினில் வீழ்ந்து கிடப்பவர்களாயிற்றே நம்மை யெல்லாம் உயர்ந்த நிலையில் உள்ளவர்கள் அல்லவா கைகொடுத்துக் காப்பாற்றியிருக்க வேண்டும்.

அவர்கள் அந்தப்பணி புரிந்திருந்தால் இரு ஜாதிகள் மோதிக் கொள்வது என்ற நிலையிருந்திருக்காதே.

அவர்கள் படித்தவர்கள். பட்டம் பெற்றவர்கள். நூற்றுக்கு தொண்ணூறு பேர் கல்லூரி, கலாசாலை, பள்ளிகளில் நுழைந்தவர்கள். சரித்திர வீதிகளில் நடந்தவர்கள். பூகோளச் சோலையில் உலவியவர்கள். விஞ்ஞானக் கடற்கரையில் அமர்ந்திருந்தவர்கள்.

படிக்காத - படிக்காமல் ஆக்கப்பட்ட - பாமர நிலையைவிட்டுக் கரையேறாத மக்களையெல்லாம் பகுத்தறிவு கீதம் பாடிடச் செய்திருக்க வேண்டிய பொறுப்பை அவர்கள் - உயர் வகுப்பினர் எடுத்துக் கொண்டிருந்தால் கண்டனம் கிளம்பியிருக்காது, களிப்போடு கூடிய நன்றி தெரிவிக்கப்பட்டிருக்கும், ஒரு பெரிய சமுதாயத்தால்!

அந்த நாள்தொட்டு இந்த நாள் வரையில் பலமான அடி பீடம் அமைத்துக் கொண்டல்லவா ஜாதி முறையென்னும் கோட்டை கட்டப்பட்டிருக்கிறது. அந்தக் கோட்டை தவிடு பொடியாகப் போகும் செயலிலே ஈடுபட கோட்டையில் உள்ளவர்களையே அழைக்கிறேன். நண்பர்களே! நதி, கடலிலே கலந்தால் கடல் நதியாவதில்லை. நதியும் கடலாகிவிடும்.

ஆனால் தனிக் கலாச்சாரம் கொண்ட பெரியதொரு சமுதாயம் சிறியதோர் சமுதாயத்தின் கலாச்சாரக் கலப்பால் தன் தனிப் பெருமை யிழந்து அழிந்துவிடும் நிலை பெறுகிறதென்றால் - எருக்க மலர்களைக் கூட தன் பூந்தோட்டத்திலே ஏற்றுக் கொள்கிற நிலைக்கு மனவளம் பெற்று விட்டதென்றால் வருந்தத்தக்க செய்திதானே இது!

ஒரு குடம் பாலிலே ஒரு துளி விஷம் கலந்தால் விஷம் பாலாகாது. பால் விஷமாகும். அதே நிலைதான் நமது பூந்தோட்டத்திலே வளர்ந்து வருகிறது.

ஜாதி உணர்ச்சி அது போலத்தான், ஜாதியென்னும் ஒரு சொல்லே யில்லாத சமுதாயத்தின் மீது படையெடுத்து பணிய வைத்து விட்டது.

அந்த உணர்ச்சி சாதாரண மனிதர்களிடம் மட்டுமா; சர்வேஸ்வரனிடத்திலேகூட இருப்பதாகத் தானே புராதன நூல்கள் கூறுகின்றன.

கண்ணப்பன், கண்ணையிழந்துதான், நெற்றிக் கண்ணனிடம் 'நாயனார்' என்ற பட்டத்தைப் பெற முடிந்தது.

காரைக்காலம்மை அழகு மேனியை அலங்கோலமாக்கி, எலும்பு உருவிலே தலை கீழாக நடந்த பிறகு தான் 'அம்மையே' என்று அழைத்தார் அப்பன் பரமசிவன்.

சீராளனைக் கறி சமைத்து சிவனுக்கு விருந்து வைத்த பிறகு தான் சிறுத்தொண்டனுக்கு பக்தன் என்ற பதக்கம் மாட்டப்பட்டது. காரணம், இவர்களெல்லாம் தாழ்ந்த ஜாதிக்காரர்கள். இதே நேரத்தில் தாயைக் கட்டிலறைக் கழைத்து, தந்தையைக் கொன்று மாபாதகம் புரிந்த உயர் ஜாதிக்காரர் ஒருவர் வைகைக் கரையிலே நின்று 'வரந் தருவாய் பரமனே!' என அழைக்க, 'வந்தேன் பக்தனே!' என்று பெருமான், மோட்சலோக 'பாஸ்போர்ட்டு'டன் பக்தனை சந்திக்க வருகிறார்.

இத்தகைய ஜாதி வெறிக் கதைகள் யாருக்கு ஆபத்தை அளிக்கின்றன. இந்தக் கதைகளையெல்லாம் செல்லுபடியாகாதவையெனக் கூறி கடலிலே எறிந்திட வேண்டியது உயர் வகுப்பார் கடமையல்லவா?

இந்தக் கதைகளும், இக்கதைகள் காட்டும் வழியில் நடப்பவர்களும் தாழ்ந்த ஜாதியினர் எதிர்ப்புக்கு உள்ளாவதற்கு முன்பு தங்களை மாற்றிக் கொண்டிருந்தால் பூந்தோட்டத்தில் புயல் வீசிட வேண்டியதில்லையே; தென்றலல்லவா தெம்மாங்கு பாடியிருக்கும்.

எதிரே நிற்பவன் கையிலே கத்தியை வைத்துக் கொண்டு நின்றால், பக்கத்திலே போகிறவன் கை முஷ்டியையாவது மடக்கிக் கொண்டுதானே போவான். அப்படி கைமுஷ்டி மடக்கினால் அதை வகுப்பு வாதம் என்றா கூறிவிட முடியும்.

கத்தியை கீழே வீசிவிடச் சொல்லுகிறேன். கைமுஷ்டி காட்ட வேண்டிய நிலை, தானே மறைந்து விடும் என்று உறுதி கூறுகிறேன். கத்தி கீழே எறியப்பட்டால், கையை உயர்த்தி வருபவன் கை தாழ்த்திடுவான் - கசப்பு நீங்கும் - கைகுலுக்கப்படும் காட்சியைக் காணமுடியும்.

கத்தி - புராணங்கள் என்பது மட்டுமல்ல; பூர்ஷ்வாத் தன்மை - புல்லுருவிக் கொள்கை எல்லாமேதான்!

அந்தக் கத்தி கைவிடப்படுமா? போர் ஒழிப்புப் புறா பறந்திடுமா? அல்லது பூந்தோட்டத்திலே புழுதி பறந்திடத்தான் வேண்டுமா?

அந்தப் புழுதி பரப்பிடும் வேலையிலே ஈடுபட வேண்டியதில்லை என்று கத்தி பிடித்திருப்போர் கூறிவிட்டால், பூந்தோட்டத்தை வசமாக்கிடும் வேலையிலே பூரிப்போடு அனைவரும் கை கோர்த்த வண்ணம் ஈடுபடலாம்.

இல்லையேல் பலர் அந்தப் பணிபுரிய - சிலர் சிரித்துக் கேலி பேச - வேண்டாத ஒரு வெறுப்பு வளரத்தான் நேரிடும்.

அந்த வெறுப்பு, தோட்டத்தை வசமாக்கும் வேலையை சிறிது தாமதப்படுத்தும் என்பதைத் தவிர வெற்றிக்கு அணைபோட்டு விட முடியாது என்பது மட்டும் தெளிவாகத் தெரிகிறது.

வண்ண மலர் வனத்தை நம் வசமாக்க வழக்கு நடத்துவோம்.

வனத்தில் எழுந்துள்ள பிரச்சினைகளை எப்படியெப்படி தீர்ப்பது என்பது பற்றி, கருத்துக்களைப் பரப்பிடுவோம். வழக்கு முடிந்து, நல்ல தீர்ப்பு கிடைக்கும் வகையில் - தோட்டத்திலே எம்மலர் வைப்பது, வைத்த மலரை யார் பறிப்பது, என்கின்ற பிரச்சாரத்தில் ஈடுபடுவோம். ஆனால், இந்தப் பிரச்சாரத்திற்காக - வழக்கு நடத்தும் தீவிரத்திலிருந்து வழுக்கி விடாமல் நடப்போம்.

அப்படி நடைபோடும் நல்லதம்பிகளைத்தான் - நான் குறிப்பிடும் பூந்தோட்டம் விரும்புகிறது. அந்த விருப்பத்தை நிறைவேற்றும் வீரர்களாகுங்கள்.

விருதுகள் காத்திருக்கின்றன. வெற்றிச் சிந்து கிளம்ப, நீங்கள் வீணை மீட்ட வேண்டியது தான் பாக்கி!

தென்றல் தவழும் - புதுமணம் நீந்தும் - மானிடம், தேன்சிட்டு, மயில், குயில், மாடப்புறா எல்லாமே புதுமைக் கலைவிருந்து படைக்கும். அந்த இன்பப் பூந்தோட்டம் காண இளைஞர் உலகுக்கு மீண்டும் ஒரு முறை அழைப்பு விடுகிறேன்.

**வணக்கம்**

❖